## சுண்ணத்தொந்தம்.

சுண்ணமதைத் தானெடுத்து வைத்துக்கொண்டு
சுருக்கான ரசமுடனே வங்கஞ்சேர்த்து
நன்னயமா யிதம்குநிகர் சுண்ணங்கூட்டி
நாட்டியதைக் கல்வத்திற் பழச்சார்விட்டு
தன்மையுடன் மெழுகுபோ லாட்டிவில்லை
தான்பிடித்து ரவிதனிலே காயப்போட்டு
உண்மையுட னோட்டில்வைத்து மண்சீலைசெய்து
வுத்தமனே புடம்போடச் சுண்ணமாச்சே. (112)

ஆச்சப்பா சுண்ணமதிற் சுண்ணஞ்சேர்த்து
அப்பனே வாய்நீரா லரைத்துக்கொண்டு
பாச்சப்பா துருசுதனக் கங்கிபூட்டிப்
பக்குவமாய்க் காயவைத்து வோடுமூடி
பூச்சப்பா மண்பூசிப் புடத்திற்போடு
பொறுமிவந்து துருசதவுஞ் சுண்ணமாகும்
நீச்சப்பா வெகுநீச்சு துருசுசுண்ணம்
நிலைத்துதென்றால் வெகுகோடி வேதையாமே. (113)

ஆமப்பா துருசுநீ றெடுத்துக்கொண்டு
அப்பனே நாவிலொன்று வீரஞ்சேர்த்து
நாமப்பா சொல்லுகிறோம் வாய்நீர்தன்னால்
நன்றாகத் தானரைத்து வழித்துக்கொண்டு
தாமப்பா தாரத்திற் கவசஞ்செய்து
சமத்தாக ரவிதனிலே காயப்போடு
ஓமப்பா மண்சீலை வலுவாய்ச்செய்து
வுத்தமனே புடம்போட நீறதாச்சே. (114)

## லோகவாதி குணம்.

நீறான தாளகநீ றதிகமப்பா
நீள்திசையில் வாதிகளோ வறியப்போறார்
பாறான நீறாலே யனந்தம்வேதை
பக்குவமாய்த் தானறிந்தோ னவனேவாதி
கூறுதே சிவயோக மிருக்குதென்று
குணமறியா நெஞ்சரிடங் கூறவேண்டாம்
பேராசை தான்பிடித்துப் பொய்யைப்பேசித்
பிதற்றினால் தனைக்கேள்ப்பான் பேயன்தானே. (115)

டம்பானந்தர் சிவநூல் சூஸ்திரம் 17-ல், முக்கியமான விஷயங்களை வெகு விபரமாகக் கூறப்பட்டிருக்கிறது. வாங்கிப்பாருங்கள்.

தானென்ற பேயர்கள்தான் மெத்தவுண்டு
தானறிந்து அவர்களுடன் சேரவேண்டாம்
ஊனென்ற வுறுதிதன்னை யறியான்மட்டை
யொருசொல்லின் பயனறியா னுறுதிகாணான்
தேனென்ற வமுர்தமதை யறிந்துகொள்ளான்
சிற்றின்பக் கூற்றறியான் றெருவிலேதான்
வீணென்ற மரவிபோற் றிரிவான் சண்டி
மேல்வரப்பு கீழ்வரப்பு அறியான்றானே. (116)

அறியாத லோபரைத்தா னடுக்கவேண்டா
மவர்களிடம் நூல்முறைகள் பேசவேண்டாம்
விரிவான விலாசம்தா யிருக்கும்போது
வீண்பயல்கள் வந்துவுற வாடிக்கொண்டு
தெரியான பொருளேது பயன்களேது
நிஷ்டைமுறை தனக்குறுதி யானதேது
பரியான பரியமைத்த வாறங்கேது
பற்பலவகைக் குற்றியென்ன பகரென்பாரே. (117)

பகரென்று கேழ்க்கின்ற பசாசரைத்தான்
பக்குவமாய்த் தானகற்றி யறிவில்நில்லு
சிகரமென்ற தீபவொளி தன்னைப்பாரு
சிவயோக நிஷ்டையிலே சென்றேநில்லு
அகரமென்ற தேகமகி லாருதார
மடுத்துநின்ற நந்தியடா மூலாதாரம்
நிகரில்லா மவுனமடா பிர்மபீடம்
நேர்மையுடன் பீடமதில் நேர்ந்துநில்லே. (118)

நேர்ந்துகொண்ட தாளகத்தி னீற்றைவாங்கி
நேர்மையுடன் துருசுநீ றொன்றாய்ச்சேர்த்துக்
கூர்ந்துநின்ற வெடியுப்புச் சுண்ணந்தன்னைக்
கூட்டடா காவிலொன்று வாய்நீர்தன்னால்
ஆர்ந்துநன்றாய்க் கல்வமதிற் குழப்பிக்கொண்டு
அப்பனே யாபொடியை ரெட்டிப்பிட்டுச்
சேர்ந்துநன்று யொன்றாகக் குழப்பிக்கொண்டு
செவ்வையாய்க் குகைதனிலே யிட்டுமூடே. (119)

இச்சாஸ்திரத்தில் மறைப்பா யுள்ளவைகளைத் தெரியவேண்டுமானால்
யோக ஞான சாஸ்திரத் திரட்டு இரண்டாம்பாகத்தைப் பார்க்கவும்.

மூடிநன்றாய் மண்சீலை வலுவாய்ச்செய்து
மூர்க்கமுடன் குகைதனிலே யமுகவூது
வாடிநன்றாய் மாண்டிறந்து வுருகிநிற்கும்
மைந்தனே அயத்தோடே நாகஞ்சேரு
தேடிநன்றாய்ப் பரியதுவுங் கூடச்சேரு
செவ்வையுடன் சேர்க்கவொன்றாய்த் திரண்டுபோகும்
கூடிநன்றாய்த் திரண்டுநின்ற வயக்களங்கைக்
கூர்மையுடன் தானெடுத்து வைத்துக்கொள்ளே. (120)

கொள்ளப்பா வயக்களங்கை வைத்துக்கொண்டு
குருவான சற்குருவைத் தியானம்பண்ணி
இல்லப்பா மதிதனிலே பார்த்துக்கொண்டு
நீமகனே கொடுத்திருக்க மாற்றெட்டாகும்
செல்லப்பா புடம்போடத் தங்கமாகும்
சிவயோகந் தனக்குறுதி யானதங்கம்
அல்லப்பா கசிந்துருகி நின்றதங்கம்
கருவான வண்டமென்ற தங்கந்தானே. (121)

தானென்ற தங்கமடா பிர்மபீடம்
தனையறிந்து சிவயோகத் தன்மைபாரு
ஊனென்ற வுடலுயிர்க்கு முதலியான
உற்றசிவ யோகமதை யார்தான்பார்த்தார்
வேனென்ற செகந்தனிலே கோடிக்கொன்று
வேதாந்தஞ் சித்தாந்த மறிந்தநல்ல
தேனென்ற வமுர்தமதைக் கண்டுகொண்டு
சிவயோகச் சிந்தையிலே யிருந்திட்டாரே. (122)

இருந்திட்ட பெரியோர்கள் மார்க்கந்தன்னை
யென்னசொல்வே னவர்களுட மனதுதன்னை
கறந்திட்ட பால்போலே சுத்தமான
கருவான பிள்ளைகளைத் தேடிப்பார்த்து
வருந்திட்ட மாகவே வசனஞ்சொல்லி
வாக்குமன மொன்றாக நிலையுஞ்சொல்லி
சிறந்திட்ட சிவயோக மவனுக்கீய்ந்து
செவ்வையுடன் குருவடியைத் தினமும்போற்றே. (123)

☞ கடைப்பிள்ளை ஞானசைதன்யம் 7-ல், ஆருதாரம் வேதாந்த சித்தாந்த விபரங்களை வெகு தெளிவாய்த் தெரியலாம்.

போற்றென்று புத்திமதி நன்றாய்ச்சொல்லி
போக்குவரத் தாகிநின்ற நிலையுஞ்சொல்லி
நீற்றென்ற நீற்றினத்தின் வகையுஞ்சொல்லி
நிலையான வாதியந்தப் பொருளுஞ்சொல்லி
காற்றென்ற முப்பூவின் மர்மஞ்சொல்லி
காயாதி கற்பத்தின் பேருஞ்சொல்லி
கூற்றென்ற திருநடனக் குறியுஞ்சொல்லிக்
குணமான யிடமறிந்து மிதுவேபாரே. (12

பாரான பெரியோர்கள் மார்க்கஞ்சொன்னேன்
பண்பறியா மூடருட வழியுஞ்சொன்னேன்
கூறாத காயாதி கர்ப்பஞ்சொன்னேன்
குருவான பதிநிலையின் குணமுஞ்சொன்னேன்
மாறாத வாசியுட வழியுஞ்சொன்னேன்
வாசிநின்று தானிலங்கு மவுனஞ்சொன்னேன்
ஆறாத மவுனத்தின் மேலேநின்று
அசைவில்லா தீபவொளி யருள்சொன்னேனே. (12

சொன்னதொரு சிவயோக மிருநூறப்பா
சுருக்கமுள்ள நூலென்வே மனதிலெண்ணி
நன்னயமா யுதயாதி காலந்தன்னில்
நன்றாகத் தேகசுத்தி நலமாய்ச்செய்து
அன்னமெல்லனுஞ் சற்குருவைத் தியானம்பண்ணி
யன்பாக விபூதிமெய்யி லணிந்துகொண்டு
வின்னமில்லாப் பிர்மநிஷ்டை தனிலிருந்து
விரும்புநன்றாய் ரேசகபூ ரகபூமபண்ணே. (126)

புருமனுடைய நிதானம்.

பண்ணப்பா கும்பகத்திற் பதிவாய்நின்று
பாக்கியமாஞ் சிவயோகங் கையில்வாங்கி
உண்ணப்பா மவுனமதா யிருநூறம்பாரு
வுத்தமனே யதைத்தொடுத்த காசம்பாரு
கண்ணப்பா அலக்குவது போலெபித்தக்
கருவான சிவயோகக் கருக்கள்தோன்றும்
நண்ணப்பா வக்கருவைக் குறிக்கக்கொண்டால்
நல்லசிவ யோகத்தில் நண்ணலாமே. (127)

கடைப்பின்னே ஞான சமாதி தீட்சை பதினேழில், இதிற்கண்ட
விஷயங்களைத்தும் வெகு தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

போற்றென்று புத்திமதி நன்றாய்ச்சொல்லி
போக்குவரத் தாகின்ற நிலையுஞ்சொல்லி
நீற்றென்ற நீற்றினத்தின் வகையுஞ்சொல்லி
நிலையான வாதியந்தப் பொருளுஞ்சொல்லி
காற்றென்ற மூப்பூவின் மர்மஞ்சொல்லி
காயாதி கற்பத்தின் பேருஞ்சொல்லி
கூற்றென்ற திருநடனக் குறியுஞ்சொல்லிக்
குணமான யிடமறிந்து மிதுவேபாரே. (124)

பாரான பெரியோர்கள் மார்க்கஞ்சொன்னேன்
பண்பறியா மூட்டரூட வழியுஞ்சொன்னேன்
கூறாத காயாதி கர்ப்பஞ்சொன்னேன்
குருவான பதிநிலையின் குணமுஞ்சொன்னேன்
மாறாத வாசியுட வழியுஞ்சொன்னேன்
வாசிநின்று தானிலங்கு மவுனஞ்சொன்னேன்
ஆறாத மவுனத்தின் மேலேநின்று
அசைவில்லா தீபவொளி யருள்சொன்னேனே. (125)

சொன்னதொரு சிவயோக மிருநூறப்பா
சுருக்கமுள்ள நூலென்வே மனதிலெண்ணி
நன்னயமா யுதயாதி காலந்தன்னில்
நன்றாகத் தேகசுத்தி நலமாய்ச்செய்து
அண்ணலெனுஞ் சற்குருவைத் தியானம்பண்ணி
யன்பாக விபூதிமெய்யி லணிந்துகொண்டு
வின்னமில்லாப் பிர்மநிஷ்டை தனிலிருந்து
விரும்புநன்றாய் ரேசகபூ ரகமும்பண்ணே. (126)

புருமடைய நிதானம்.

பண்ணப்பா கும்பகத்திற் பதிவாய்நின்று
பாக்கியமாஞ் சிவயோகங் கையில்வாங்கி
உண்ணப்பா மவுனமதா யிருநூறும்பாரு
வுத்தமனே யதைத்கொடுத்த நாதம்பாரு
கண்ணப்பா துலக்குவது போலேயிந்தக்
கருவான சிவயோகக் கருக்கள்தோன்றும்
நண்ணப்பா வக்கருவைக் குறித்துக்கொண்டால்
நல்லசிவ யோகமதில் நண்ணலாமே. (127)

கடைப்பிள்ளை ஞான சமாதி தீட்சை பதினேழில், இதிற்கண்ட விஷயங்களனைத்தும் வெகு தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

ஆமப்பா சிவயோக மறியவேண்டும்
மந்த்ராங்க மானகருக் காணவேண்டும்
காமப்பால் கானல்பால் கொள்ளவேண்டுங்
கைமுறையாய்ப் பூஜைவிதி பண்ணவேண்டும்
வாமப்பால் கொண்டுமதி யறியவேண்டும்
வரிசையுள்ள வுரிசைதனைக் காணவேண்டும்
தாமப்பா தன்னிலையைத் தானேகண்டு
சங்கையுள்ள கெங்கையிலே ஸ்நானம்பண்ணே. (128)

கெங்கையென்று லெங்கேயென்று கேட்பாயாகிற்
கேசரத்திற் கேசரியாம் புருவமையம்
அங்கையடா சுழிமுனையி லஷ்டகெங்கை
யனுதினமு மவ்விடத்தே நாட்டமாக
சங்கையுட னின்றதினல் ஸ்நானமாகுந்
தன்மையுடன் பூசிக்கத் தரிசனமுமாகும்
மங்களமாய் மனதொருமை யாகநின்றால்
மகத்தான சிவயோக வரிசைதானே. (129)

வரிசையுள்ள புருவமைய மெங்கேயென்று
வாய்திறந்து சொல்லுதற்கு நாவோயில்லை
புருஷருடன் மனதாரிமை யாகவென்று
பொற்குருவாஞ் சற்குருவைப் போற்றிநின்றால்
குருசமுக மவனறிந்து சொல்வான்கேளு
குண்டலியா முதாதாரு வேரரந்தன்னில்
பருவமதா யக்கிவள்ர்க் கெழுந்தவாவி
பற்றுதடா புத்தியறை றகுகையிற்றானே. (130)

தானென்ற குகையிலக்த ஆவிசென்று
தன்மையுடன புத்தியிலே பற்றிநல்ல
கோனென்ற புத்திநல்ல தீபம்போலே
கொழுந்துவிட்டு யெரியுமடா குணமாய்ப்பாரு
மானென்ற வத்தீப வொளியிலேதான்
மயங்காமற் றியங்காமல் வரிசையாகத்
தேனென்ற ருசிபோல சிவயோகத்தைச்
சிந்தைவைத்துக் கண்டவனே சிவயோகியாமே. (131)

கடைப்பிள்ளை ஞானத்தண்டகம் 50-ல், சோதிசொரூபம் சிவயோகம் அமுதரச முதலிய விபரங்களைத் தெளிவாய்க்கூறியிருக்கிறது.

திலர்தம்.

ஆமப்பா சிவயோகத் திருக்கும்போது
அருளான திலர்தவகை யொன்றுகேளு
நாமப்பா சொல்லுகிறே மண்டத்தோடே
நலமான மரமஞ்சள் கஸ்தூரிமஞ்சள்
தாமப்பா சாதிக்காய் சாதிப்பத்திரி
தாழம்பூத் தாளுடனே சந்தனமும்பூவும்
காமப்பால் கல்மதமுங் கஸ்தூரிகோவும்
களங்கமற்ற புழுகுடனே கர்ப்பூரங்கூட்டே. (132)

கூட்டப்பா சரக்குவகை பதிமூன்றுந்தான்
குறிப்பாக வோரிடையா யெடுத்துக்கொண்டு
நாட்டப்பா கல்வமதிற் பொடித்துக்கொண்டு
நலமான பழச்சாறும் பன்னீர்வார்த்து
ஆட்டப்பா வடிமினது போலேமைந்தா
வரைக்கையிலே புழுகிட்டு அரைத்தாநன்றாய்
நீட்டப்பா கயிறதுபோல் நீட்டிக்கொண்டு
நிழலுலர்த்திப் பதனமதாய் வைத்துக்கொள்ளே. (133)

கொள்ளுகிற விதமென்ன வென்பாயாகிற்
குணமாகச் சிவயோகத் திருக்கும்போது
கல்லுருவாய்த் திலர்தமதை யெடுத்துக்கொண்டு
நாட்டப்பா குருபதிமேற் திலர்தம்போடச்
சொல்லுகிற மந்திரத்தை யொன்றுகேளு
கருககடா சுவாவென்று திலர்தம்போட்டு
உள்ளுறவா யிருதயத்தின் மனதைநசட்டி
உம்மெனவே தம்பித்து வொடுங்கிநில்லே. (134)

நொடுக்கியந்த வொடுக்கமதி லொடுங்கிநில்லு
வுலகத்தி லுள்ளவர்க ளுன்னைக்கண்டாற்
படிந்துவுந்தன் பாதத்திற் பணிவாரையா
பக்குவமாய்ப் பிணியாளர் பணிந்துகண்டால்
கடுக்கிமிகப் பணிந்தோடும் பிணிகளெல்லாம்
நலமான சிவயோகச் செத்திப்பட்டு
மடிந்துவிடும் பிணிகளெல்லா முலகிலுள்ளோர்
மண்டிநிற்பா ருன்சமூகங் கண்டிலாரே. (135)

ஜெயமுனிவர் திருமந்திர ஞானம் 37-ல், யோக சாதன மர்மங்களும் மந்திரசித்தி விபரங்களும் கூறப்பட்டிருக்கிறது கண்டுணர்க.

திலர்தமை.

கண்டபடி யின்னமொரு கருவைக்கேளு
கருவான திலர்தமை யொன்றுசொல்வோம்
விண்டபடி யாரறிந்து செய்யப்போறார்
மேலான வேதாந்தி செய்வானப்பா
அண்டமெனுங் கருவெடுத்து வைத்துக்கொண்டு
அப்பனே யேரண்டத் தயிலத்தாலே
சண்டிடவே குழைத்துநல்ல ரவியிற்போடு
தூசிசெத்தை விழுகாமற் சுகமாய்க்காரே. (136)

காத்துநன்றாய் ரவிதனிலே கிண்டிக்கிண்டி
கனமாக நீர்வற்றக் காயப்போட்டால்
பார்த்துநின்ற ரவியினுட வொளிதான்சென்று
பங்கயத்தின் மைதனிலே பற்றும்பாரு
சேர்த்துநின்ற மையொளியின் பெருமைதன்னைச்
செப்புகிறேன் மனோன்மணியின் றிறத்தால்மைந்தா
சாற்றுகின்ற மையெடுத்துச் சிமிளில்வைத்துச்
சாதகமாய் மைக்குநிகர் புழுகுஞ்சேரே. (137)

சேரப்பா புழுகிட்டு மைவிளக்கிச்
செவ்வையாய்ச் சிவயோகத் திருக்கும்போது
நேரப்பா நின்றநிலை தவறுமற்றுன்
நேர்மையுடன் மையெடுத்துத் திலர்தம்போட்டு
காரப்பா வஞ்சனு தேஷிபாதங்
கருத்துடனே மனதறிவாற் கார்த்தாயாகில்
ஊரப்பா வுள்ளபயி ருயிர்கவெல்லா
முனதுவச மாகிவுனக் கடிமையாமே. (138)

ஆமப்பா யிடக்காத்திற் மைப்பொட்டிட்டு
அசையாமற் கூர்த்துமைமை யன்பாய்ப்பார்த்தால்
போமப்பா வெகுதூரம் ஒளிதான்தோன்றும்
புதுமைவெகு அதிசயங்கள் கண்ணிற்காணும்
தாமப்பா கண்டதொரு வதிசெயத்தைத்
தாரணியில் விள்ளாதே தனதாயார்க்கும்
நாமப்பா கண்டபடி யின்னதென்று
நாட்டினால் நாய்போலே யலைவார்பாரே. (139)

கௌசிகமுனிவர் ஞான சூஸ்திரம் 30-ல், வஸ்து தெரிசனமும், சித்து விபாகங்களும் கூறப்பட்டிருக்கிறது. வாசித்துணருங்கள்.

பாரப்பா வலக்கரத்தில் மைப்பொட்டிட்டு
பதிவாகக் கீழ்த்திசையைப் பரிவாய்ப்பாரு
நேரப்பா வதுதாழ்ந்து தலைதான்ருென்றும்
நிதிகள்பல வந்திசயங்கள் நிசமாய்காணும்
தேரப்பா மனந்தேறி யகலநில்லு
சிவசிவா சிவயோகத் திறந்தானென்று
ஊரப்பா வறியாமல் மையைநீயும்
வுண்மையுடன் பதனமதாய் வைத்துக்காரே. (140

காரடா மூலமதில் அங்கென்றூதிக்
கைமுறையாய்ச் சத்திசிவ மொன்ருய்ச்சேர்த்து
சேரடா கம்பியுப்புப் பூரம்ரெண்டு
செவ்வையுடன் தூக்குநிகர் சேர்த்துக்கொண்டு
வாரடா கல்வமதில் நன்ருயாட்டி
வழித்துஒரு பீங்கானில் வளமாய்ச்சேர்த்து
நேரடா ரவிதனிலே காயப்போடு
நிசமான நந்தியெனற வுப்பதாச்சே. (141)

## நந்தியுப்புக்குரு.

உப்பான நந்தியுப்புப் பலந்தானென்று
ஒருமையுள்ள உமைப்பொடியும் பலந்தானென்று
அப்பான பொடியதுவும் பலந்தானென்று
அருமையுள்ள தாளகமும் பலந்தானென்று
வைப்பான காசியுட கட்டிதானும்
மார்க்கமுடன் பலமறைதான் வளமாய்ச்சேர்த்துத்
தப்பாமல் நாகரச மொன்ருய்க்கூட்டித்
தன்மைபெற வொருபலந்தா னெடுத்துக்கொள்ளே. (142)

கொள்ளப்பா வாறுவரைச் சரக்கைநன்ருய்க்
குருபானைத் தொழுதுமிகக் கல்வத்திட்டு
மெள்ளப்பா தான்பொடித்துப் பழச்சாரிட்டு
மேன்மைபெற மெழுகதுபோ லாட்டிமைந்தா
நள்ளப்பா வுருட்டியதை வட்டுபண்ணி
நலமாகவோட தனில் நடுவேவைத்து
சென்னப்பா செப்பகலால் நன்ருய்மூடித்
திர்க்கமுடன் கோழிமுனை யதின்மேற்கொட்டே. (143)

இதிற்கூறிய விஷயங்களனைத்தும் விபரமாய்த் தெரிய விரும்பு
வோர் குருராஜர் சிவயோக சிந்தாமணி 50-ல் பார்க்கவும்.

கொட்டுவது குருசொன்ன வளவாய்க்கொட்டி
கூர்மையுட னடுப்பேற்றித் தீயைமூட்டித்
திட்டமுடன் தீயெரித்து வருசும்போது
சிவசிவா பதமென்ன வென்பாயாகில்
வட்டமுள்ள மணல்மேலே கருகிற்றானால்
மைந்தனே பதஞ்சரியென் றெடுத்துமெள்ள
சட்டமுட னாற்வைப்பாய்க் குளிருமட்டுந்
தன்மையுடன் குளிர்ந்தபின்மேல் தயவாய்க்கேளே. (144)

கேளப்பா மணலைமெள்ள வாரிப்பின்பு
கிருபையுள்ள கிண்ணமதைத் திறந்துபாரு
வேளப்பா யெரித்தகெற்றிக் கண்ணாலந்த
விதமான சரக்காறுங் கட்டிப்போகும்
கேளப்பா சொல்லாமல் வைத்துக்கொண்டு
குருவான திருவடியைத் தொழுதுபோற்றி
வாளப்பா குகைதனிலே செம்புருக்கி
வரிசையுட னதுக்குவரை மருந்துசேரே. (145)

செம்புசுத்தி.

சேர்ப்பதுதான் செப்புருகி நிற்கும்போது
செவ்வையுடன் மருந்தெடுத்துச் சிறுகவையா
கோர்ப்பதுபோற் கொஞ்சக்கொஞ்ச மாகச்சேர்த்துக்
குணமாகச் சரியாகச் சேர்த்துக்கிண்டி
வார்ப்பதுதான் பூமியிலே வார்த்தாயாகிற்
மகத்தான செம்பதுவுஞ் சுத்தியாச்சு
கார்ப்பதுதான் செம்புசுத்தி பதனம்பண்ணிக்
கருவான வெள்ளியிலே பத்துக்கொண்டு (146)

ஒன்றான வெள்ளியிலே பத்துக்கொண்டு
வுருக்குமுகந் தன்னிற்சீ கொடுத்துப்பாரு
நன்றான மாற்றதுவு மூவைத்தாகி
நாற்றமுள்ள செம்புதனி லெழுமையுமாகுக்
குன்றாத தங்கமதிற் பத்துக்கொண்டு
கொடுத்துருக்கித் தகடடித்துப் புடத்தைப்போடு
நின்றாடும் பரஞ்சோதி யானசோதி
நேர்மையுள்ள சோதியடா தங்கந்தானே. (147)

---

கடைப்பிள்ளை சிவயோக ஞானம் 100 ல், வாசியோக நிலையும் வாத முறைகளும் வகையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

பாரப்பா வலக்கரத்தில் மைப்பொட்டிட்டு
பதிவாகக் கீழ்த்திசையைப் பரிவாய்ப்பாரு
நேரப்பா வதுதாழ்ந்து தலைதான்றுேன்றும்
நிதிகள்பல வதிசயங்கள் நிசமாய்க்காணும்
தேரப்பா மனந்தேறி யகலதில்லு
சிவசிவா சிவயோகத் திறந்தானென்று
ஊரப்பா வறியாமல் மையைநீயும்
வுண்மையுடன் பதனமதாய் வைத்துக்காரே. (140)

காரடா மூலமதில் அங்கென்றுநிக்
கைமுறையாய்ச் சத்திசிவ மொன்றாய்ச்சேர்த்து
சேரடா கம்பியுப்புப் பூரம்ரெண்டு
செவ்வையுடன் தாக்குநிகர் சேர்த்துக்கொண்டு
வாரடா கல்வமதில் நன்றாயாட்டி
வழித்துஒரு பீங்கானில் வளமாய்ச்சேர்த்து
நேரடா ரவிதனிலே காயப்போடு
நிசமான நந்தியென்ற வுப்பதாச்சே. (141)

நந்தியுப்புக்குரு.

உப்பான நந்தியுப்புப் பலந்தானென்று
ஒருமையுள்ள வரைப்பொடியும் பலந்தானென்று
அப்பான பொடியதுவும் பலந்தானென்று
அருமையுள்ள தாளகமும் பலந்தானென்று
வைப்பான காசியுட கட்டிதானும்
மார்க்கமுடன் பலமறைதான் வளமாய்ச்சேர்த்துத்
தப்பாமல் நாகரச மொன்றாய்க்கூட்டித்
தண்மைபெற வொருபலந்தா னெடுத்துக்கொள்ளே. (142)

கொள்ளப்பா வாறுவரைச் சரக்கைநன்றாய்க்
குருபரனைத் தொழுதுமிகக் கல்வத்திட்டு
மெள்ளப்பா தான்பொடித்துப் பழச்சாறிட்டு
மேன்மைபெற மெழுகதுபோ லாட்டிமைக்தா
ளள்ளப்பா வுருட்டியதை வட்டுபண்ணி
நலமாகவோட தனில் நடுவேவைத்து
செள்ளப்பா செப்பகலால் நன்றாய்மூடித்
தீர்க்கமுடன் கொழிமணலை யதின்மேற்கொட்டே. (143)

இதிற்கூறிய விஷயங்களனைத்தும் விபரமாய்த் தெரிய விரும்புவோர் குருராஜர் சிவயோக சிந்தாமணி 50-ல் பார்க்கவும்.

கொட்டுவது குருசொன்ன வளவாய்க்கொட்டி
கூர்மையுட னடுப்பேற்றித் தீயைமூட்டிக்
கிட்டமுடன் தீயெரித்து வருகும்போது
சிவசிவா பதமென்ன வென்பாயாகில்
வட்டமுள்ள மணல்மேலே கருகிற்றனல்
மைந்தனே பதஞ்சரியென் றெடுத்துமெள்ள
சட்டமுட னாற்வைப்பாய்க் குளிருமட்டுந்
தண்மையுடன் குளிர்ந்ததின்மேல் தயவாய்க்கேளே. (144)

கேளப்பா மணலைமெள்ள வாரிப்பின்பு
கிருபையுள்ள கிண்ணமதைத் திறந்துபாரு
வேளப்பா யெரித்தமெற்றிக் கண்ணாலந்த
விதமான சரக்காறுங் கட்டிப்போகும்
கேளப்பா சொல்லாமல் வைத்துக்கொண்டு
குருவான திருவடியைத் தொழுதுபோற்றி
வாளப்பா குகைதனிலே செம்புருக்கி
வரிசையுட னதுக்குவரை மருந்துசேரே. (145)

செம்புசுத்தி.

சேர்ப்பதுதான் செப்புருகி நிற்கும்போது
செவ்வையுடன் மருந்தெடுத்துச் சிறுகவையா
கோர்ப்பதுபோற் கொஞ்சங்கொஞ்ச மாகச்சேர்த்துக்
குணமாகச் சரியாகச் சேர்த்துக்கிண்டி
வார்ப்பதுதான் பூமியிலே வார்த்தாயாகிற்
மகத்தான செம்பதுவுஞ் சுத்தியாச்சு
கார்ப்பதுதான் செம்புசுத்தி பதனம்பண்ணிக்
கருவான வெள்ளியிலே பத்துக்கொன்றே. (146)

ஒன்றான வெள்ளியிலே பத்துக்கொன்று
வுருக்குமுகந் தன்னில்நீ கொடுத்துப்பாரு
நன்றான மாற்றதுவு மூவைந்தாகி
நாற்றமுள்ள செம்புதனி லேழரையுமாகுங்
குன்றாத தங்கமதிற் பத்துக்கொன்று
கொடுத்துருக்கித் தகடடித்துப் புடத்தைப்போடு
நின்றாடும் பரஞ்சோதி யானசோதி
நேர்மையுள்ள சோதியடா தங்கந்தானே. (147)

கடைப்பிள்ளை சிவயோக ஞானம் 100 ல், வாசியோக நிலையும்
வாத முறைகளும் வகையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

### லிங்கக்குரு.

தானென்ற தளவாயாஞ் சாதிலிங்கந்
　　தன்மையுட னதுவிபரஞ் சாற்றக்கேளு
தேனென்ற கல்வத்திற் பழச்சார்விட்டுத்
　　திறமாக வரைத்துநன்றாய் வட்டுப்பண்ணி
கோனென்ற குருபதத்தைப் போற்றிநன்றாய்
　　குவலயத்தில் துஷ்டர்களை யகலத்தள்ளி
மானென்ற மண்மறைவிற் புடத்தைப்போடு
　　மார்க்கமுடன் சரக்கைக்துங் கட்டிப்போமே. (148)

கட்டிநின்ற மருந்திடைக்குச் செம்புருக்கிக்
　　கைம்முறையாய் மருந்ததனைச் செய்துகொண்டு
திட்டமுடன் தண்ணீர்போ லுருக்கிச்சாய்த்துச்
　　செவ்வையுடன் செம்பதனை யெடுத்துப்பாரு
சட்டமதாய்ச் செம்பதுவுங் கட்டிப்போகுந்
　　தன்மையுடன் வெள்ளிதனிற் பத்துக்கொன்று
இட்டமுடன் கொடுத்துருக்கி மாற்றைப்பாரு
　　என்னசொல்வேன் பதினாறு வயதுதானே. (149)

தானான வேதைமுறை சொன்னமார்க்கந்
　　தன்மையுள்ள யோகத்துக் குறுதியாகும்
கோனான குருவருளால் சொன்னதல்லாற்
　　குறும்பான திருடனுக்கோ சொன்னேனையா
மானான மவுனமுள்ள சிவயோகிக்கு
　　மனதுரிமை யாகவென்று வாழ்த்தினேன்யான்
தேனான மதியமுர்தங் கொண்டுகல்ல
　　சிவயோக மார்க்கத்திற் சேர்ந்துநில்லே. (150)

### நிஷ்டைமுறை.

நில்லென்ற நிலையறிந்து நிஷ்டைகூடி
　　நிஷ்களமாம் பிர்மத்தில் வாசிபூட்டிச்
சொல்லென்றுந் தவறாமல் மதியைப்பார்த்துத்
　　துலங்குமதி ரவிதனிலே மதியைப்பார்த்துக்
கொல்லென்று ரவிதனிலே வுரிமையாகக்
　　கூறுபஞ்ச வக்கினியைக் கொளுத்திப்பாரு
சில்லென்று மதியமுர்த வாரிபாயுஞ்
　　சிவசிவா வக்தமுர்தங் கொண்டுதேறே. (151)

---

இராமரிஷி சிவயோக ஞானம் 18-ல், மறைப்பாயுள்ள ரகசியங்களை வெளிப்படையாய்ச் சொல்லியிருக்கிறது. வாங்கிப்பாருங்கள்.

தேறுவதால் தேகவச்சிர காயமாகுஞ்
சித்தாதி சித்தனென்ற பேருமாகுங்
கார்புருவக் கருணைவிழிக் கமலமீதிற்
கருவான பருதிமதிச் சுடருக்கப்பால்
பார்புனலாம் நெருப்பாறுக் கப்பால்நாதம்
பதிவான நாதமதைப் பார்க்கவேண்டிக்
கூரமுத மதிபெருகும் நாதத்தோடே
கொண்டுசுடம் நின்றநிலை கூர்ந்துபாரே. (152)

சந்திர சூரியன்.

கூர்ந்துபார் சூரியனே சத்திசத்தி
கொழுகின்ற சந்திரனே சிவமதாகும்
தேர்ந்துபா ரிவர்களுட நிதானங்கேளு
சிவப்பான சூரியகலை பனிரெண்டாகும்
ஆர்ந்துபார் சந்திரகலை பதினாறுகும்
அதிகமுள்ள சந்திரனும் வாண்மைமிஞ்சிச்
சேர்ந்துசுடர் சத்திகலை பனிரெண்டோடே
சிவசிவா சிவகலையுஞ் சேர்ந்தவாறே. (153)

சேர்ந்துமிச்சம் நாலுகலை பூரணமாய்நின்று
செவ்வையுட நாலிலொன்று அம்பரத்தின்பதியாய்
நேர்ந்துமிகப் போனதின்பின் மூன்றுகலைதானும்
நெடுவானில் விந்துவென விளம்பிறையுமாகக்
கூர்ந்துபார் சத்தியிடந் திருவாசியாகிக்
கொழுகின்ற சதுர்த்தேதி யாகிப்பின்னும்
ஆர்ந்துநின்ற வமாவாசைப் பருவமாகி
யந்தமென்று மிதுமூன்று மொன்றுய்ப்போச்சே. (154)

ஒன்றுகச் சதுர்த்தியிலே வளர்பிறையாய்நின்று
யுகமுடிந்து வளர்ந்ததடா பதினாறுகக்
கண்டாயோ மதிநிறைந்து குறைந்தசெய்தி
கருவாக வுனதிடத்தில் காட்டிவைப்போம்
பண்டான வகாரமடா விந்துவிந்து
பதிவான வுகாரமடா சத்திசத்தி
நின்றுடும் மகாரமடா சுழினைக்கம்பம்
நேர்மையுட னிதுமூன்றுந் தேகமாச்சே. (155)

அத்திரிமகாரிஷி உண்மை ஞான போதகம் 30-ல், ஒவ்வொரு விஷயங்களையும் வெகு தெளிவாய்ச் சொல்லியிருக்கிறது. கண்டுணர்க.

தேகமென்றால் வெகுதூரம் நினைக்கவேண்டாம்
சேர்ந்துநின்ற வூதபித்தஞ் சிலேற்பமாகும்
ஆகமுட னதுமூன்று மிடைபின்னாக
வமர்ந்துநின்ற சுழிமுனையாய் நின்றவாறும்
பாகமென்ற சூரியன்றான் வாதமாச்சு
பதிவான சந்திரன்றான் பித்தமாச்சு
தாகமுடன் சேத்துமந்தான் சுழியாய்நின்று
சகலமெஜந்து மூன்றினால் மடிந்தவாறே. (156)

மடிந்தவகை யேதெனவே யென்பாயாகில்
மக்களே யவனவன்செய் மார்க்கத்தாலே
முடிந்தவரை நன்மார்க்கம் விட்டகுறைமார்க்க
மூர்க்கமுள்ள துன்மார்க்கத் தாலேமைந்தா
கடிந்துநின்ற யிடையான பித்தமீறிக்
கபாலமென்ற சுழினையிலே சூடுதாக்கிச்
சொடிந்துவந்த வாசமதைத் துஞ்சப்பண்ணித்
தொல்லுலகிற் பிறந்திறந்து போவார்காணே. (157)

பிறந்திறந்து போகாத நெறியைச்சொல்வேன்
பெருமைவிட்டு வுரிமையிலே மெய்மாய்நின்று
கறந்துநின்ற வகாரமடா விந்துவிந்து
கருவான விந்துமடா மதியுமாச்சு
சிறந்துநின்ற மதியெல்லாம் உகாரமான
தேகமென்ற சூரியனிற் சேர்ந்துகொண்டு
மறந்துவிடா தேமகனே மகாரமான
மகத்தான பராபரத்தில் மகிழ்ந்துநில்லே. (158)

இராப்பகல்.

நில்லென்ற நிலையறிந்து நிலையில்நின்று
நிலையில்லாச் சந்திரனை நிலையிற்சேரச்
சொல்லொன்றுந் தவறாத சொர்க்கமாகுஞ்
சோர்வான நாதமது யென்னவென்றால்
உல்லென்ற ரவிதானே சொர்க்கஞ்சொர்க்கம்
ஊன்றிநின்ற சந்திரன்று நாதமாச்சு
செல்லென்ற ரவிமதிதா னேதோவென்றால்
சேர்ந்துநின்ற ராப்பகலாய் நின்றவாரே. (159)

இதிற்கண்ட விஷயங்களைப் புசண்டர் ஞானசைபநிடதம் 30 ல் பார்த்தால் வெகு லெகுவாய்த் தெரிந்துகொள்ளலாம்.

வாரான ராப்பகல்தா னென்சொல்லென்றால்
மக்களே வெளிதோன்றச் சொல்வேன்கேளு
காரான ராவதுதான் கண்மூடலப்பா
கருவான பகலதுதான் பார்வைமைந்தா
கூறாக ரெண்டுமொன்றாய்ச் சேர்த்துக்கொண்டு
குருவான பதிதலத்திற் கூட்டிமேலே
நேராக நின்றுதவ யோகஞ்செய்தால்
நிலையான சிவயோக மதுதான்பாரே. (160)

நாதவிந்து மெழுகு.

பார்க்கையிலே மூலமதி லக்கினியுண்டாகப்
பதிவான கர்ப்பமொன்று சொல்லக்கேளு
சேர்க்கையுடன் அகாரமுடன் உகாரம்ரெண்டுஞ்
செவ்வையுடன் ரெண்டுமொன்றாய்ச் சேர்த்துக்கொண்டு
ஆர்க்குமிது தெரியாமல் ரவியில்வைக்க
அப்பனே நாதவிந்து வொன்றாய்ச்சேர்த்து
மார்க்கமுள்ள மெழுகாகு மைந்தாமைந்தா
மனமகிழ்ந்து பணவிடைதான் மகிழ்ந்துகொள்ளே. (161)

கொள்ளையிலே சந்திரன்றான் தேய்ந்துதேய்ந்து
கூர்மையுடன் ரவிதானும் பிரகாசமாகி
கள்ளையிலே யகப்பட்ட பாண்டம்போலே
சுகமான தத்துவங்கள் செத்திப்பட்டுத்
தொல்லையென்ற சூழ்வினைக ளகன்றுபோகுந்
துருவமென்ற வத்துருவந் தலக்கமாகும்
பிள்ளையிலே யுங்களைப்போற் பிள்ளையுண்டோ
பின்னான ரவியினுட பிலத்தைப்பாரே. (162)

பிலமான காயாதி கற்பங்கொண்டு
பேணியே யில்லிடத்தைப் பிலக்கப்பண்ணி
குலமான மூலமுத லாறுதாரங்
கூட்டிநின்ற நவக்கிரக மொன்பதிற்கும்
நிலமாக வநுக்கிரக மார்தான்காண்பார்
நீள்திசையில் சற்குருவைத் தேடிநின்று
நலமாக நாலஞ்சு வீட்டுக்கெல்லாம்
நடுவீடாய் நின்றவநுக் கிரகந்தானே. (163)

---

ஆதம்கார்முனி ஞான சூஸ்திரம் 14-ல், யோக சாதன மர்மங்களை
யும் ஆதாரமூல பிரணவ சொரூபங்களையும் சொல்லப்பட்டிருக்கிறது,

தானென்ற வநுக்கிரகஞ் சுத்தப்பாழாய்த்
தவறாத பாழ்வீட்டை யென்னசொல்வேன்
கோனென்ற குருவருளால் வீட்டைநம்பிக்
கோடான கோடிசித்தர் தவமேசெய்தார்
ஏனென்றா லவ்வீட்டிற் குறிதானென்று
யென்னவென்றால் தூண்டாத தீபந்தீபம்
வானென்ற வத்தீபம் பார்க்கவேண்டி
மகத்தான சத்திசிவ பூஜைசெய்யே. (164)

பூஜையென்ற சிவபூஜை சத்திபூஜை
புருஷமுடன் செய்பவற்கு யோகந்தங்கு
நேசமுட னப்பூஜை மனதிலெண்ணி
நிச்சயமாய்க் குருவருளைச் சேர்த்துக்கொண்டு
ஆசையென்ற பலருசியை யகலத்தள்ளி
யருந்துருசி தனையறுத்து மருந்துவோர்க்கு
மாசியென்ற மயக்கமறு மனமேதங்கு
மகத்தான வாசியில்சென் றேறுவானே. (165)

ஏறுவான் வாசியிற்சென் றேறியந்த
யிருட்டான பதிகடந்து வெளியிற்சென்று
தேறுவான் மனந்தேறி யமுர்தங்கொண்டு
சிந்தைமன தொன்றாகித் தீபம்நோக்கிக்
கூறுவான் தூரதிஷ்டி நடத்தையெல்லாங்
குருவான பராபரத்தின் குறிப்பினாலே
ஆறுவான் நவக்கிரக மருளைப்பெற்று
அன்பான வநுக்கிரக மாகிதானே. (166)

ஆதியென்ற வநுக்கிரகம் பிர்மபீடம்
அப்பனே சுழிமுனையாய் நின்றபீடம்
சோதியென்ற சுடர்வடிவா யிருந்தபீடந்
துடர்ந்துநின்ற சீடனுக்குக் குருவானபீடம்
வாதியென்ற வந்தகிரி தீபபீடம்
மனோன்மணியாள் சென்றுவிளை யாடுபீடம்
கோதிலாச் சுத்தமய மானபீடங்
கூர்மையுள்ள பீடமடா நந்திதானே. (167)

புசுண்டர் மெஞ்ஞான விளக்கம் 80-ல், வாசியோக வல்லபங்களையும், அதற்குரிய ஆறாதார விபரங்களையும் தெளிவாய்க்கூறியிருக்கிறது.

நந்திவொளி கண்டவர்தான் ஞானயோகி
நலமான சிவயோகி பிர்மயோகி
அந்தமுள்ள வஷ்டாங்க மானயோகி
யருவுருவாய் நின்றதொரு பரமயோகி
பந்தமுள்ள வாசிநிலை யறிந்தயோகி
பதிவான காயாதி கற்பயோகி
கெந்தருவ ரானகே சரத்தில்வாழுங்
கெவுனமென்ற கெவுனதி யோகிதானே. (168)

தானென்ற யோகத்துக் குறுதியென்ன
தன்மையுள்ள வாசியென்ற மூலமூலங்
கோனென்ற குருவருளால் வாசிமூலக்
குறிப்பறிந்து கொள்ளுவது யென்னவென்றால்
நானென்ற வாணவத்தை நலமாய்த்தள்ளி
நடுவான பூரணத்தைப் பற்றிக்கொண்டு
மானென்ற பிரணவத்துள் மனதைவைத்து
மகத்தான கேசரியைத் தொழுதுநில்லே. (169)

தொழுதமுறை யென்னவென்று லகாரதிட்சை
சுருக்கமுள்ள வுகாரமடா சத்திபூஜை
பழுதொன்று நிலையாம விரண்டுமொன்றாய்ப்
பக்குவமாய்த் தான்செபித்துப் பதியில்நின்று
நெளிதமுள்ள மனதுறுதி யாகிவந்த
ரேசகமும் பூரகமும் நேரேசெய்து
முனிதமர்க்குள் நிறுத்திக்கும் பகத்தில்நின்று
முனையான தீபமதைத் தூண்டிப்பாரே. (170)

லிங்கத்தார குரு.

தூண்டிமிகப் பார்க்கையிலே சோதிகாணுந்
துவாதிசாந் தத்தில்மன துறுதியாகும்
தாண்டிமிகப் போகாம லறிவில்நின்றால்
சசலகலைக் கியானமெல்லாந் தானேதானாய்
வேண்டியதோர் கருமான மின்னமொன்று
வெகுதெளிவாய்ச் சொல்லுகிறேன் மெய்யதாக
பூண்டமன துறுதியினா லிங்கத்தாரம்
புகழான விந்துவுடன் கெந்திகூட்டே. (171)

---

மௌனச்சித்தர் பாடல் 12ல், யோக சாதன விபரங்களை
வெகு தெளிவாய்த் தெரிந்துகொள்ளலாம். வாங்கிப்பாருங்கள்.

பூட்டப்பா கெந்தியுடன் துருசுதானும்
பொருந்தவசு மோரிடையாய் நிறுத்துக்கொண்டு
நாட்டப்பா வதற்கிடைதா னுதிசேர்த்து
நன்றான பழச்சாற்றால் கல்வத்தாட்டி
ஆட்டப்பா யீராறு சாமமாட்டி
அரகரா வழித்துருட்டி வட்டுப்பண்ணி
மூட்டப்பா சட்டிதனிற் வைத்துமூடி
மூடுவது மணற்கொட்டி யெரித்திடாயே. (172)

எரித்துமணல் கருகும்போ யிறக்கிவைத்து
இதமாக வர்றினபின் திறந்துபாரு
குறித்தசரக் காறுமொன்றாய்க் கட்டிப்போகுங்
குருவாக மணந்தனிலே கூர்ந்துகொண்டு
வருத்தமிட்டுச் செம்புருக்கி யதற்குநேராய்
மார்க்கமுடன் மருந்தீவாய் கிண்டிக்கிண்டித்
திருத்தமுடன் மருந்தீய்ந்து நன்றாவூதிச்
செம்புகளிம் பானதுவுங் கட்டிப்போச்சே. (173)

கட்டிநின்ற செம்பதனைப் பதனம்பண்ணிக்
கருவாக விடைக்கிடையே தங்கஞ்சேர்த்து
திட்டமுடன் வெள்ளிதனிற் பத்துக்கொன்று
செவ்வையுடன் றானுருக்கி யெடுத்துப்பாரு
வட்டமிட்ட ரவியொளியை யென்னசொல்வேன்
மார்க்கமுட னவ்வொளியைக் கண்டுநீயுந்
துட்டருடன் கூடாமல் விண்ணைநோக்கித்
துவாதசாந் தத்தில்மனந் துலங்கிநில்லே. (174)

நில்லென்ற நிலையறிந்து மனதுபூண்டு
நிலையான மூலமுத லாறுதாரம்
உள்ளென்ற வுள்மூல மேலாதாரம்
ஒடுங்கிநின்ற தத்துவமாந் தொண்ணூற்றாறுந்
தள்ளாந்தப் பதிதனிலே நிறுத்தியந்தத்
தள்ளாலே யாகுதியாய்ச் சாம்பலாக்கிக்
கொள்ளுகிற விதமென்ன வுத்தளமாய்ப்பூசிக்
குண்டலியி னந்தியொளி கூர்ந்துபாரே. (175)

மௌனச்சித்தர் ஞானம் 8ல் சின்மய சொரூப மூலாட்சரங் களையும் மௌனதீட்சை விபரங்களையும் சொல்லப்பட்டிருக்கிறது.

## ஞானம்.

பாரப்பா ரவிமதியு மொன்றாய்க்கூட்டிப்
பருவமுடன் புருவநடுப் பதிக்கப்பாலே
நேரப்பா வதனிலொரு கமலந்தோற்றும்
நின்றிலங்கும் கமலமதை நேரேபார்த்தால்
ஆரப்பா வறிவார்கள் ஞானதீபம்
அரகரா சிவயோக மானதீபம்
மேரப்பா மெய்ஞ்ஞான தீபந்தன்னை
மெய்யாகக் கண்டுசிவ யோகம்பாரே. (176)

பாரப்பா மனதுகொண்டு அறிவிற்சென்று
பரிவான மூலமடா மூலாதாரம்
நேரப்பா நின்றதொரு வாறாதாரம்
நிலையான நடுமைய மேலாதாரம்
வீரப்பா கொண்டவரி தாரந்தாரம்
மெய்யான தாரமடா விஞ்சைவிஞ்சை
கூரப்பா குருவான விஞ்சைமூலங்
கூர்மையுட னம்மூலங் குறியாய்க்காணே. (177)

குறியாகக் கண்டந்தக் குறியில்நின்று
கூர்மையுள்ள தாரமதை யெடுத்துமைந்தா
சரியாகத் தானுருக்கிப் பாண்டத்திட்டுச்
சளியாத காடியதி விட்டுநன்றாய்
நெறியான மஞ்சளொடு வுப்புநேராய்
நினைவாகத் தானூட்டி யதற்குட்சேர்த்து
தெரிவாகக் கிண்டிநன்றாய்ப் பிசறிக்கொண்டு
தீயெரித்து வடுப்பேற்றி யெரித்திடாயே. (178)

எரித்தபத மாவுகண்டா லிறக்கிமைந்தா
வின்பமுடன் குளிரவைத்து மறுநாள்தானும்
திருத்தமுடன் முன்போலே (பத்து) முறையே செய்தால்
சிவசிவா தாரமதிற் கசப்புநீங்கும்
வருத்தமென்று நினையாமல் ரவியிற்போட்டு
மார்க்கமுடன் தானுணர்ந்து சுக்கிலம்போல்
கருத்துடனே தானுணர்த்தி யெடுத்துகல்ல
கல்லுரலில் மாவாக யிடித்திடாயே. (179)

---

கடைப்பிள்ளை ஞான தீட்சாவிதி 16ல், பூரணதீட்சை, சத்தி தெரிசனம் யோகஞான விபரங்களையும் தெளிவாய்த்தெரியலாம்.

இடித்திடுவாய்ச் சமூலமதை பொடியதாக்கி
இன்பமுடன் முன்போலே பாண்டத்திட்டு
வடித்ததொரு மாவதற்கு வரைதான்பூச
மாட்டிநன்று யொன்றுக்கி மைந்தாமைந்தா
தொடுத்ததொரு பாண்டமதை மூடிமைந்தா
சுகமாக மண்டலந்தான் சமாதிவைத்து
நடுத்தரமாய் மனதுறுதி யாகக்கொண்டு
நடுவான பூரணத்தைத் தொழுதிடாயே. (180)

தொழுதிடுவாய் முந்திமுந்திக் குருவைத்தானுந்
தொழுதபின்பு அகாரமென்ற சிவத்தைப்பூசிப்
பழுதொன்று நினையாமல் சத்திதன்னைப்
பாலகனே மனதுறுதி யாலேபூஜி
நெளிதமுள்ள மனதாலே பூஜைபண்ணி
நீமகனே குருபூஜை நன்றாய்ச்செய்து
வழிதவறு தேயிருந்து சமாதிசென்று
மார்க்கமுட னக்கடத்தை யெடுத்திடாயே. (181)

எடுத்ததொரு பாண்டமதை மைந்தாநீயும்
எழெட்டு நாள்வரைக்கும் ரவியிற்போடு
தொடுத்ததொரு மேற்கவசந் தள்ளிநீயும்
சுகமாக வரிதாரக் கடுகைமைந்தா
விடுத்ததைநீ பிங்கான்றன் றுளிசேர்த்து
மெய்யாக வைத்ததைநீ பூஜைபண்ணு
அடுத்ததொரு பூஜையென்ன வென்றால்மைந்தா
வாதியென்ற நவகோண மிட்டுப்பாரே. (182)

பாரப்பா நவகோண மிட்டுக்கொண்டு
பரமான மேருவதை நடுவேவைத்து
காரப்பா சுகந்தமலர் பொற்பதத்தால்
கனிவாக வற்சனைகள் கருத்தாய்ச்செய்து
தேரப்பா வயிரவற்கு வடமாலைசாற்றிச்
சிவசிவா தீபமொடு தூபங்காட்டி
நேரப்பா நின்றபர மேருதன்னில்
நிலையான வழுதாசக் கடுகுவாங்கே. (183)

இச்சாஸ்திரத்திற்கூறிய இரகஷியங்களைத் தெளிவாய்த்தெரியவிரும்பி
னால் யோக ஞான சாஸ்திரத் திரட்டு 1, 2, 3, பாகத்தைப் பார்க்கவும்.

வாங்கிடுவாய் கடுகில்நல்ல கடுகுபோலே
மைந்தனே தானெடுத்து காவுதன்னில்
பாங்குபெற வைத்தநின்மே லங்கென்றேதான்
பதிவாகக் கண்டமதி லங்கென் றாணு
சாங்கமுட னமுதரசந் தானேபொங்குந்
தன்மையுடன் தான்புசித்துத் தனதாய்மைந்தா
ஆங்கதிகொண் டநுதினமும் வாசிநோக்கு
அருளான வாசியினாற் றீபநோக்கே. (184)

## பூரணலேகியம்.

நோக்குவதற் கின்னமொரு வுறுதிகேளு
நுண்மையுள்ள பூரணலே கியந்தான்மைந்தா
வாக்குமன துறுதியடா மகத்தாம்போத
மனதுநெறி யறிவான வாமபோதம்
ஏர்க்கையுள்ள போதமதை யென்னசொல்வேன்
ஏகாந்த லேகியத்தி னியல்புகேளு
சேர்க்கையுள்ள செங்கமலத் தமுர்தம்வாங்கிச்
சிவசிவா பீங்கானிற் சேர்த்துக்கொள்ளே. (185)

சேர்த்ததொரு பூரணத்திற் பூரஞ்சேர்த்துச்
சிவசிவா யிடைசரியாய்ச் சேர்த்துமைந்தா
பார்த்திபனே ரெண்டுமொன்றாய்ச் சேர்த்துக்கொண்டு
பதிவாக ரவிதனிலே வைத்துக்காரு
பூர்த்தமல ரமுதரசம் பூரம்ரெண்டும்
பொருந்தியொன்றாய்க் கட்டியது புட்டுப்போலாம்
கார்த்திருந்து ரவிதனிலே நவநாள்போடு
காரணமா யத்திடைக்குப் பூரஞ்சேரே. (186)

பூரமதிற் கிடைசரியாய்ச் சேர்த்துக்கொண்டு
புத்தியுடன் கல்வமதில் நன்றாயாட்டிக்
காரமென்ற லேகியத்தை யுருட்டிமைந்தா
சனமான பீங்கான்றன் மேருக்கேற்றி
வீரமென்ற பூரணமே யென்றுபோற்றி
விபரமென்ற நவகோணம் நடுவில்வைத்துச்
சாரமுடன் சற்குருவைத் தியானம்பண்ணிச்
சமரசமாய்க் கழ்களவு யெடுத்திடாயே (187)

---

மச்சமுனிவர் ஞான தண்டகம் 97-ல், மை மெழுகு மூலிகை முதலிய விபரங்கள் தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

எடுத்துநடுப் பூரணத்தைத் தொழுதுமைந்தா
யிதமாக மண்டலமே கொண்டாயானால்
அடுத்தமனே யாறுமடா வலுத்துப்போகும்
அசைவான வாசியது வமர்ந்துநிற்கும்
தொடுத்ததொரு தேகமடா வச்சிரகாயஞ்
சுந்தரம்போல் மன்மதனாய்த் துலங்குவாய்நீ
நடுத்தரமாய்ப் பூரணத்தி லிருந்துகொண்டு
நாதாந்த சிவயோகம் நண்ணுவாயே. (188)

நண்ணுவது பூரணத்தை நம்பவேண்டும்
நாதாந்தப் பேரொளியை நாடவேண்டும்
உண்ணுவது சத்திசிவ பூஜைவேண்டும்
ஒடுக்கமந்த நிலைதனிலே யுறுதிவேண்டும்
எண்ணுமந்தப் படியாக யிருக்கவேண்டும்
ஏகாந்தச் சிவயோக வியல்புவேண்டும்
விண்ணதனை மெய்யாக நம்பிக்கொண்டு
மேலான சிவயோகம் விரும்பினில்லே. (189)

## பூப்பூச்சுண்ணம்.

நில்லந்த நிலைதனிலே நிலைத்தால்மைந்தா
நீடூழி காலமடா நிலைக்குந்தேகம்
கல்லென்ற கல்லுதனைக் கருத்தாய்நீயும்
கருவான வுப்புதனை வாங்கிமைந்தா
உள்ளென்ற வக்கினியிற் சுத்திபண்ணி
ஓர்நிறையாய் வெடிசீனம் நன்றாய்ச்சேர்த்துச்
செல்லென்ற தன்னீரா லரைத்து மைந்தா
திறமாக வரைத்ததனை வட்டுப்பண்ணே. (190)

பண்ணியந்த வட்டதற்குக் கவசம்பண்ணிப்
பரிவாக ரவியிலிட்டுப் புடத்திற்போடு
தன்மையாய்ப் புடமாறி யெடுத்தபின்பு
தனதாக வஞ்சுமுறை முன்போற்செய்தால்
உன்னியதோர் காரமதை யென்னசொல்வேன்
வுகமையிலாச் சுண்ணமடா வேகமெத்த
விண்ணிறைந்த சுண்ணமடா வேகமெத்த
வேதாந்தச் சிவயோகம் விளங்குந்தானே. (191)

---

இவ்விஷயங்களனைத்தும் தேரையர் நவலோக பற்பம் 16-ல், தெளிவாகக் கூறியிருக்கிறது வாங்கி வாசித்துணருங்கள்.

தானான சுண்ணமதில் வேதைகோடி
தயங்காத பற்பமடா கோடாகோடி
பூனான கட்டினமு முறுக்கினமுங்கோடி
பூரணமாய்ச் செயநீரின் புதுமைகோடி
கோனான குருமுறைகள் கோடாகோடி
கூறுகிற கற்பமுறை குணமோகோடி
ஊனான தேகமதிற் சுண்ணஞ்சேர்க்க
ஒடுங்குகின்ற மாய்கையெல்லா மோடிப்போச்சே. (192)

போச்சென்று விடுகாதே காரச்சிப்பி
புதுமையுடன் சொல்லுகிறேன் கும்பிடானே
நீச்சென்ற வோடதனை வாங்கிமைந்தா
நிலையாத வழலைதனைச் சுத்திசெய்து
பேச்சொன்று மில்லாத பொன்கபுருவாங்கிப்
பெருமையுள்ள சத்தியது கூடச்சேர்த்து
மூச்சென்ற தன்னீரால் கல்வத்தாட்டி
மூர்க்கமுட னாட்டியபின் வட்டுப்பண்ணே. (193)

சத்த பற்பம்.

பண்ணியந்த வட்டதனை யுலர்த்திமைந்தா
பாலகனே மண்சீலை பதிவாய்ப்பண்ணி
சென்னிமையை நோக்கியந்தப் புடத்தில்வைத்துத்
தீப்பிடித்து யெரிகின்ற பருவந்தன்னில்
தன்னிமையாய்க் கவசமதை யெடுத்துமுன்போல்
தன்னீராற் றாட்டி வட்டுச்செய்து
புண்ணியனே மண்சீலை தானுஞ்செய்து
புத்தியாய் முன்போலே புடத்திற்போடே. (194)

போட்டபுட மாறியபின் னெடுத்துப்பாரு
பூரணத்தின் கிருபையினால் வெளுத்துநீறும்
தாட்டிகமாய் நீறினதை வைத்துக்கொண்டு
சமரசமா யந்திசந்தி யுள்ளேகொண்டால்
நாட்டியதோர் வாதபித்தஞ் சிலேற்பனத்தால்
நாடிநின்ற வியாதிகளும் நசித்துப்போகும்
பூட்டியதோர் திரையகலும் புதுமைகாணும்
பூரணமாய்ச் சிவயோகம் புனிதமாமே. (195)

சூரியானந்தர் ஞான சூஸ்திரம் 13-ல், இதிற்கூறிய விஷயங்களும் இன்னுமனேக சாதன விஷயங்களுங் கூறியிருக்கிறது.

புனிதமுள்ள சிவயோக மெடுத்துப்பார்த்துப்
பூரணமா யத்தறிவிற் புனிதமாகக்
கெனிதமுடன் மவுனமதி லுரைத்துமைந்தா
கேசரத்திற் கேசரியாம் பூரணத்தைநம்பி
தொனிதமுள்ள சிலம்பொலியைக் கண்டுநீயுந்
தூண்டாத மணிவிளக்கைத் தொழுதுபோற்றி
மணிநாத மனோன்மணியை மனதிற்கொண்டு
மார்க்கமுள்ள சத்திசிவ மகிமைகேளே. (196)

கேளப்பா சத்திசிவ மகிமைதன்னைக்
கிருபையுட னறிந்தவையார் வணங்கப்போறார்
காலப்பா தனையறியார் தலையைக்காணார்
காலுதலை வேறாகக் கருதுவான்பார்
மேலப்பா சத்தியென்ற ரூபந்தன்னை
மெய்யான வுயிர்சிவத்துக் குறுதிசெய்தால்
தாளப்பா திறந்தமுர்தங் கொள்ளலாகுஞ்
சத்திசிவ பூஜையில்லான் மடையன்தானே. (197)

பத்தியம்.

தானென்ற மடையரவர் வெகுபேருண்டு
தன்மையுடன் சத்திசிவ மறிந்திருந்தும்
நானென்ற வாணவத்தை நீக்கமாட்டார்
நலமான பூரணத்தை நம்பமாட்டார்
தேனென்ற காயாதி கற்பங்கொள்ளார்
திருடரவர் வாய்மதங்கள் திறமாய்ப்பேசி
கோனென்ற குருவினுட மனதைக்கிண்டிக்
கூடழிந்து போவாரைக் குறித்துத்தள்ளே. (198)

தள்ளுவது மெண்ணெய்யொடு புளியுமாகா
தாம்பூல மீனிறைச்சி சற்றுமாகா
துள்ளுவது யானையுடன் கோபமாகா
துணையான தாரம்விட்டு மறுதாரமாகா
அல்லலென்ற வலிவாகா ஆசையாகா
ஆனந்த மானதொரு வறிவில்நில்லு
சன்னையென்ற சாகரத்தின் மூடரோடே
சற்றுறவு மாகாது தனித்துநில்லே. (199)

இச்சாஸ்திரத்தில் மறைப்பாய் கூறியிருக்கும் இரகஷியங்களை யோகஞான சாஸ்திரத்திரட்டு 8ம் பாகத்தில் பார்க்கவும்.

தனித்திருந்து சத்திசிவ பூஜைபண்ணு
தன்மையுடன் பாலமூர்தங் தானேகொள்ளு
தொணித்திருந்த பூரணத்தைச் சுகமாய்ப்பூசிக்
சுகமாகச் சிவயோகத் துறையில்நில்லு
மணித்திருத்தா ளானகம லமூர்தங்கொண்டு
மயங்காத பூரணத்திற் றீபங்காணும்
அணித்திருந்த சிவயோகத் தண்டத்துச்சி
அம்பரமாஞ் சிதம்பரத்தி லடங்குமுத்தே. (200)

முத்தான சிவயோக மிருநூறுதன்னை
முறையான குருவெனவென் றெடுத்துப்பார்த்து
சித்தான சித்துவிளை யாடுமைந்தா
சிவயோக மார்க்கமடா திறந்தான்மெத்த
பத்தாசை கொண்டுமன மவுனமாகப்
பதியாகச் சிவயோக மிருநூறும்பார்
வித்தான பிறவியது வற்றுப்போகும்
மேலான சிவயோகம் விளங்குமுற்றே. (201)

இராமதேவர் சிவயோகம் உ००.

முற்றிற்று.

## இராமதேவர் திருவாய் மலந்தருளிய சாஸ்திரங்கள்.

| | | | |
|---|---|---|---|
| இராமதேவர் வைத்தியம் | 1000 | ஷையார் சாக்குவைப்பு | 50 |
| ஷையார் சாலம் | 800 | ஷையார் அஷ்டாங்கயோகம் | 50 |
| ஷையார் நிகண்டு | 500 | ஷையார் முப்பு சூஸ்திரம் | 31 |
| ஷையார் கருக்கடை | 500 | ஷையார் பரிபாஷை விளக்கம் | 27 |
| ஷையார் குருநூல் | 300 | ஷையார் ஞானத்திறவு | 16 |
| ஷையார் சிவயோகம் | 200 | ஷையார் குருசூஸ்திரம் | 16 |
| ஷையார் தண்டகம் | 110 | ஷையார் பூஜாவிதி | 10 |
| ஷையார் தண்டக பட்சணி | 109 | ஷையார் ஞானம் | 10 |
| ஷையார் பரஞானகேசரி | 100 | ஷையார் ஞானம் | 5 |
| ஷையார் வைத்திய சூஸ்திரம் | 83 | ஷையார் வைத்தியம் | 6 |

இந்த சாஸ்திரங்களெல்லாம் ஓலையேட்டுப் பிரதிகளிலிருந்ததை தற்சமயம் அச்சிட்டு வெளியிட்டுக்கொண்டு வருகிறது.

இப்படிக்கு,

இ. ராம. குருசாமிக்கோனார் சன்.



உ

பரமபதிதுணை.

யகாமகத்துவம்பொருந்திய

# இராமதேவர் ரசாயனம் 6.

தேவியெனு மனோன்மணியா மெந்தன் தாயார்
திருப்பாதம் போற்றிசெய்து தீரமாக
ஒவியம்போல் ரசாயனத்தை உனக்குத்தானும்
உத்தமனே சொல்லுகிறேன் உலகோர்க்காக
பாவிகட்குக் காட்டாதே வெளிவிடாதே
பச்சமுட னிம்முறைபோ லாருஞ்சொல்வார்
ஆவியொன்று கூடிரண்டா யிருந்ததாலே
அப்பனே யிம்முறையை யுரைத்திட்டேனே. (1)

ஒன்றான ரசாயனத்தை யியம்பக்கேளு
ஓகோகோ வதின்பெருமை யென்னசொல்வேன்
நன்றான (பெரிய) திராட்சிப்பழம் பலந்தான்பத்து
நலமான (சிறு) திராட்சிப்பழம் பலந்தான்பத்து
குன்றான பாண்டத்திற் போட்டன்பாக
குவிப்பாக சுத்தசலம் சேர்நிறையாயூற்றி
கன்றான தனுபால்தான் குடித்ததன்மை
கனிரசத்தை யிறக்கிவிடக் களறுவேனே. (2)

களறுகிறேன் எரித்துமெள்ள இறக்கியாற்றிக்
கண்மணிபோல் பிசைந்துவடி கட்டியேதான்
தளராமல் முன்னிறைபோல் யெடுத்துவொன்றாய்த்
தழைக்கவே ரெண்டுமிகக் கலந்துகொண்டு
அளவதுசேர் குறையாமல் பாண்டத்திட்டு
அதிவிதமா யெரித்துவிடு பதமதாக
இளகியது பிசினியைப்போல் கம்பிபோலே
இசைந்தபதந் தன்னைக்கண்டு இணக்கக்கேளே. (3)

கேளப்பா சதகுப்பை சீரகமுமேலம்
கெடியான திரிகடுகு லவங்கப்பட்டை
வாளப்பா நன்னாரிவேர் முத்தக்காசு
வகையான சித்தரத்தை சாதிப்பத்திரி
நீளப்பா அத்திதிப்பிலி தேவதாரம்
நிறைந்ததொரு சந்தனமு மாஞ்சியேலம்
தேளப்பா யிம்மருந்து பிணியைத்தீர்க்கத்
தெண்புடனே தானெடுப்பீர் பலமொன்றுமே. (4)

பலமதென்ற முறைப்படியே தவறிடாமல்
பக்குவமாய் வறுத்திடித்து வடிதான்கட்டி
நலமதென்ற பொடியதனைப் பாகிற்கூட்டி
நயன்றிடவே ரசாயனமாய்ச் சேர்த்துக்கொண்டு
பெலப்படுத்தி யிறக்கியபின் ஆறவைத்துப்
பெருமையுடன் பீங்கானிற் பதனம்பண்ணி
நிலப்படுத்திச் சேர்ந்தகனல் மேகத்துக்குச்
சீர்பெறவே கொடுத்திடவே தீருந்தானே. (5)

தீருகிற வியாதிதனைச் செப்பக்கேளு
தினவுவனல் கைகாலி ளைச்சல்மெத்தச்
சோருகிற வாய்வுபித்த அஸ்திவெட்டை
சொரிவிரணங் கண்ணெரிச்சல் வயிற்றின்காந்தல்
மாறுகிற புத்திவன்னத் துவேசமெல்லாம்
மனோன்மணியின் கிருபையினால் மகனுமப்பா
ஏறுகிற விதம்பார்த்து யேறிநின்றால்
எத்தொழிலுங் கைகூடி யிசையுந்தானே. (6)

உத்த வாக்கிய மெய்யது வாகுமாம்
மெத்த வர்க்கிது மிக்கன புத்தியாம்
சுத்த வாக்கியம் சொற்பிழை யற்றது
மத்த வாக்கிய மாக்கிடா தென்றது.

இராமதேவர் ரசாயனம் 6,

முற்றிற்று.

